23rd January 1961]

**Sri V. SUBBIAH :** பஞ்சாயத்து யூனியன், பஞ்சாயத்துக்கள் இவைகளுக்கு மூன்று மைல்களுக்கு உட்பட்ட ரோடுகள்தான் வேலைக்காக கொடுக்கப்படுகிறது. அதிலும் குறிப்பாக பல மேஜர் டிஸ்ட்ரிக்ட் ரோடுகளோடு அதர் டிஸ்ட்ரிக்ட் ரோடுகளையும் (ஓ.டி.ஆர்.) ஹைவேஸுடன், சேர்க்கவேண்டும் என்று பிளானிங் போர்டு சிபாரிசு செய்திருப்பதாகத் தெரிகிறது . . . . . . அதன் பேரில் . . . . . . . . .

**Mr. SPEAKER :** இந்தக் கேள்வி சென்னை நகரத்திலுள்ள ரோடுகளைப்பற்றி. நீங்கள் கேட்கும் விபரங்களுக்கு தனிக் கேள்வி போடவேண்டும்.

**Sri M. KALYANASUNDARAM :** கனம் நிதி அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டு, சென்னை கார்ப்பரேஷனுக்கு முதலில் கொடுத்த பணத்தையே இன்னும் உபயோகப்படுத்தவில்லை என்று குறிப்பிட்டார்கள். இதற்கான பணம் எப்போது ஒதுக்கப் பட்டது, இதற்கு ஒதுக்கப்பட்ட பணத்தை சரியான சமயத்தில் என் செலவு செய்யமுடியவில்லை என்பதைப்பற்றி அரசாங்கம் ஆராய்ந்ததா, அதன் விவரங்கள் என்ன ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** சர்க்கார் ஆராய்ந்தது, இந்த விவரங்களையெல்லாம் சொல்லவேண்டுமானால் தனிக்கேள்வி போடவேண்டும்.

**Sri S. M. ANNAMALAI :** ஸார், கனம் நிதி அமைச்சர் அவர்கள், கார்ப்பரேஷனுக்கு கொடுத்த பணத்தை சரியானபடி உபயோகிக்கவில்லை என்று . . . . . (கனம் ஸ்ரீ சி. சுப்ரமணியம் சரியானபடி என்றல்ல) தெரிவித்தார்கள். இந்தப் பணத்தைக் கொடுக்க என்னென்ன கண்டிஷன்கள் கொடுத்தார்கள், சீப்-என்ஜினியரிடமிருந்து அனுமதி கிடைத்த பின்னால்தான் பணம் ஒதுக்க முடியும் என்றெல்லாம் உத்தரவு இருக்கிறதே, இவற்றையெல்லாம் நீக்குவதற்கு அரசாங்கம் முன் வருமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** இது இப்போது புதிதாக போடப்பட்டிருக்கும் உத்தரவு அல்ல. எல்லா இடங்களிலுமே வேலை செய்ததன் பின்னால்தான் கிராண்ட் கொடுக்கப்படும். அதற்கு முன்பாகவே வேஸ் அன்ட் மீன்ஸ் வகையில் உதவி செய்ய வேண்டுமென்றால் அதற்கும் உதவி செய்வதற்கும் அரசாங்கம் தயாராக இருக்கிறது. அதல்லாமல் வேலை செய்வதற்கு முன்னாலேயே கிராண்ட் கொடுக்கவேண்டுமென்று சொல்வது முடியாத காரியம்.

*Sattur Block*

*** 94 *Q.*—Sri N. R. THIAGARAJAN :** கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

இராமநாதபுரம் ஜில்லா, சாத்தூர் பிளாக் ஆபீசை மத்தியப் பகுதியான எழாயிரம் பண்ணைக்கு மாற்ற உத்தேசம் உண்டா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : The Elayirampannai village lies in the Vembakottai Block, which has been newly brought into existence. The question does not, therefore, arise.